# சைவன் யார்?

## மக்களின் பாகுபாடு

இப்பூவலகின்கண் எங்கும் மக்கள் குடியிருக்கின்றனர். உடலமைப்பை முன்னிட்டு அவர்களை மூன்று வகுப்பினராகப் பிரிக்கலாம். ஆசியாக் கண்டத்தின் மேற்குப் பகுதியிலும், ஐரோப்பாவிலும் வசிப்பவர்கள் ஒரே வகுப்பைச் சேர்ந்தவர்களாகின்றனர். படம் பிடித்துப் பார்த்தால் அவர்களுக்கிடையில் அதிக வேற்றுமையைக் காண முடியாது. அதிக வேற்றுமையைக் காண முடியாது. இம்மக்களைக் காகேசியன் டைப் (Caucasian type) என்று அழைப்பது ஐதிகம். ஆசியாக் கண்டத்தின் கிழக்குப் பகுதியில் வசிப்பவர்கள் மங்கோலியன் டைப். ஆப்பிரிக்காவிலுய்ம், அமெரிக்காவிலும் நெடுங்காலம் வசித்து வந்திருப்பவர்கள் நீக்ரோ டைப்பைச் சேர்ந்தவர்களாகின்றனர். உடலமைப்பையும் அவயவங்களின் அறிகுறிகளையும் கொண்டு இந்த மூன்று வகுப்பினரையும் எளிதில் பாகுபடுத்திவிடலாம். இனி, இவர்களுள் வெவ்வேறு இனத்தினர் என்னும் பிரிவுகள் வருகின்றன. இந்தியன், அரேபியன், ஐரோப்பியன் என்னும் இனங்கள் இருக்கின்றன. பண்பாட்டை முன்னிட்டு மக்கள் வெவ்வேறு கூட்டங்களாகப் பிரிக்கப்படுகின்றனர். கற்றவர், மற்றவர், அமைதியான வாழ்க்கையை விரும்புபவர், சண்டை சச்சரவுகளில் ஊக்கம் கொண்டிருப்பவர், உழைப்பாளிகள், சோம்பேறிகள், எம்மொழியைப் பேசுபவர், எத்தகைய நாகரிகமுடையவர் - இத்தகைய கூட்டங்களாக மக்களைப் பிரிக்கலாம்.

மக்களுள் ஆங்கிலேயன் யார் என்னும் கேள்வி பிறக்கலாம். அவன் இங்கிலாந்தில் பிறந்தவனாக இருக்கவேண்டும். நிறத்தில் அவன் வெள்ளையன். அவன் பேசுவது ஆங்கில மொழி. அணிவது அவனுக்கென்று அமைந்த உடை. இனி, இதற்கெல்லாம் மேலாக ஆங்கிலப் பண்பு என்பது ஒன்று இருக்கிறது. அதில் அவன் ஊறியிருக்க வேண்டும். தன் தேசமாகிய இங்கிலாந்தைவிட்டு அவன் நெடுங்காலம் பிரிந்திருக்கலாகாது. இந்த நிபந்தனைகளையெல்லாம் நிறைவேற்றி வருபவன் ஆங்கிலேயன் என்று அழைக்கப்படுகின்றான். சொந்த நாட்டினின்று பிரிந்திருப்பதை முன்னிட்டும் மொழி, உடை, பண்பாடு, பழக்க வழக்கங்களில் மாறுதல் ஆகியவைகளை முன்னிட்டும் அவன் ஆங்கிலேயன் என்று அழைக்கத் தகுதியற்றவனாகப் போய்விடலாம். இத்தகைய கோட்பாடுகளும், நியமங்களும் சற்று ஏறத்தாழ உலகிலுள்ள எல்லாச் சமுதாயங்களிலும் இருந்து வருகின்றன.

## சமயத்தை முன்னிட்ட பிரிவினைகள்

இனி, மக்களுக்கிடையில் மற்றொருவிதப் பாகுபாடு உண்டு. அது அவர்கள் அனுஷ்டிக்கும் சமயங்களை அடிப்படையாகக் கொண்டது. உலகிலுள்ள மக்களுள் கிறிஸ்தவர்களின் எண்ணிக்கை எவ்வளவு என்னும் கேள்வி எழுமிடத்து மக்களின் நிறம், மொழி, உடை, நாடு முதலியவைகள் பின்னணிக்குப் போய்விடுகின்றன. அவர்கள் அனுஷ்டிக்கும் சமயத்தை அடிப்படையாகக் கொண்டே அவர்கள் தொகுத்தெடுக்கப்படுகின்றனர். அதே விதத்தில் இஸ்லாமியர்களின் எண்ணிக்கையைக் கண்டுபிடிக்க முயலுமிடத்து உலகத்தில் எல்லா நாடுகளிடத்தும் கருத்துச் செலுத்தப்படுகிறது. ஆனால் ஹிந்து மதத்தைச் சேர்ந்தவர்களுடைய எண்ணிக்கையைத் தெரிந்துகொள்ள வேண்டுமென்றால் அதன் பொருட்டு இந்திய நாடு ஒன்றே கணக்கில் எடுத்துக் கொள்ளப்படுகிறது. ஏனென்றால் மற்ற மதங்களைப் போன்று ஹிந்துமதம் மதம் மாற்றுதல் என்னும் செயலில் ஈடுபடுவதில்லை; மனிதன் ஹிந்து மதத்தைச் சேர்ந்தவன் ஆவதற்குப் பிறப்பு என்னும் ஒரே முறைதான் உளது. ஆனால் அவன் ஹிந்து மதத்தினின்று வேறு மதங்களுக்கு மாற்றப்படுவதற்கு மார்க்கங்கள் பல உள. சரித்திரப் பூர்வமாக ஆராய்ந்து பார்க்குமிடத்துப் புற மதஸ்தர்களைத் தன்னுள் எடுத்துகொள்ளும் கிருத்தியத்தில் ஈடுபடாதிருக்கிறதெனினும் உள் வலிவிலே வேறு எந்த மதத்துக்கும் ஹிந்து மதம் பின் வாங்கியதன்று. உலகிலுள்ள மதங்களனைத்துக்கும் அதைத் தாய்மதம் என்றால் அது பெரிதும் ஒவ்வும். தாய் ஒருத்தி தன் குழந்தைகளின் இயல்புகளுக்கு ஒப்ப வெவ்வேறு முறைகளில் அவைகளைப் பேணி வருகிறாள். அச்செயலை ஹிந்துமதம் செய்துவருகிறது. தன்னோடு தொடர்பு வைக்கும் மற்ற மதங்களையெல்லாம் நேர்முகமாகவோ மறைமுகமாகவோ ஹிந்துமதம் ஆதரித்து வருகிறது. இனி, ஹிந்துமதத்துனுள் உட்பிரிவுகள் பல இருக்கின்றன. அவைகளினுள் எட்டு மதங்களை முக்கியமானவைகள் எனலாம், சைவம், சாக்தம், வைஷ்ணவம், சௌரம், கௌமாரம், காணபத்தியம் என்னும் ஆறும் வேதத்தைப் பிரமாணமாகக் கொண்டுள்ளவைகள். பௌத்த மதமும், ஜைனமதமும் இதே நாட்டுக்கு உரியவைகள் எனினும் வேதத்தினிடத்து அவைகள் பாராமுகமாக இருந்து விடுகின்றன. ஆயினும் இந்த எட்டு மதங்களும் ஹிந்துமதத்தின் வெவ்வேறு கிளைகளாம். புத்தமதத்தைச் சேர்ந்தவர்கள் இந்தியாவுக்கு வெளியே புறநாடுகளில் ஏராளமானபேர் இருக்கின்றனர். மக்களை மதம் மாற்றும் செயலில் புத்த மதம் ஈடுபட்டுள்ளது. ஜைன மதம் சிறிய அளவில் அச்செயலைச் செய்து வருகிறது. மிக அண்மையில் ஹிந்து மதம் தனது சிறப்பை மற்றவர்களுக்கு விளக்கிக் காட்டும் செயலில் ஈடுபட்டு வருகிறது. அதன் மூலம் தனது தாய்மை ஸ்தானத்தை அது உறுதிப்படுத்தி வருகிறது என்று இயம்பலாம். ஆனால் புறமதஸ்தர்களைத் தத்தம்

மதங்களைப் புறக்கணித்துவிட்டு ஹிந்துமதத்துக்கு வரவேண்டுமென்று அது புகட்டுவதில்லை.

## புறச்சின்னங்கள்

உலகிலுள்ள கிறிஸ்த்வர்களெல்லாரும் சிலுவையைத் தங்கள் மதத்தின் புறச் சின்னமாகக் கொண்டிருக்கின்றனர். முஸ்லீம்களனைவரும் பிறையையும், நட்சத்திரத்தையும் தங்கள் மதத்தின் சின்னங்களாகக் கொண்டிருக்கின்றனர். ஹிந்து மதத்துக்கோ புறச்சின்னங்கள் எண்ணிக்கையில் அடங்காதவைகள். அதை முன்னிட்டே அதற்க்குத் தனிப்புறச் சின்னம் ஒன்றும் இல்லையென்று இயம்பிவிடலாம். இனி, ஹிந்துக்களுடைய மத அனுஷ்டான முறையை ஆராய்ந்து பார்க்கிறபொழுது வெவ்வேறு வகைப்பட்ட புறச்சின்னங்கள் கட்புலனாகும். சைவன் ஒருவன் நெற்றியிலே நீறு பூசியிருக்கிறான்; கழுத்திலே ருத்ராக்ஷம் அணிந்திருக்கிறான். வைஷ்ணவன் ஒருவன் நெற்றியிலே திருமண் சாத்தியிருக்கிறான். கழுத்திலே துளசி மணி அணிந்திருக்கிறான். சைவன் யார் என்று ஆராயும்பொழுது வைஷ்ணவன் யார் என்பதையும் சேர்த்தே ஆராய்ந்து விடுகிறோம். ஏனென்றால் புறச்சின்னத்திலும், கோலத்திலும் அவர்கள் பிரிவுபட்டிருக்கின்றனரெனினும் கொள்கையிலோ லக்ஷியத்திலோ அவர்களுக்கிடையில் வேறுபாடு இல்லை. மானுட உடல் வெந்து சாம்பலாகக்கூடியது என்னும் கருத்தை அடிப்படையாகக் கொண்டது சைவச் சின்னம். உடல் அழிந்து மண்ணாகக் கூடியது என்னும் கருத்தை அடிப்படையாகக் கொண்டது வைஷ்ணவச் சின்னம். தத்துவத்தில் இரு சமயங்களுக்கிடையிலும் வேற்றுமையில்லை. இவ்விதத்தில் ஹிந்துக்கள் எல்லாரும் மேனியின் மீது வெவ்வேறு சின்னங்களை அணிவதன் மூலம் தாங்கள் எந்தச் சமயத்தைச் சேர்ந்தவர்கள் என்பதைத் தெரிவிக்கின்றனர். சமயத்தின் பெயரால் மக்களுக்கிடையில் ஆழ்ந்த ஒற்றுமை ஒருபுறம் உண்டாவது போன்று வேற்றுமையும் வளர்ந்து விடுவதுண்டு. ஆனால் வேற்றுமைக்குப் பிறப்பிடம் அக்ஞானம். ஒற்றுமைக்கு உறுதுணையாயிருப்பது மெய்ஞானம்.

## சின்னத்தின் பயன்

சைவன் யாரென்று விளக்குமிடத்து வைஷ்ணவன் யார் என்பதையும் விளக்கிவிடுகிறோம் என்பதை வாசகர்கள் ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டும். புறச் சின்னம் ஒன்றை அணிவதில் பயன் மிக உண்டு. தொழிலுக்கேற்ற புறச்சின்னங்களிருக்கின்றன. உடையைக் கொண்டு ஒருவரை வழக்கறிஞர் அல்லது வக்கீல் என்று அறிந்துகொள்கிறோம். அதற்கென்று அமைந்துள்ள உடை அவரை இன்னாரென்று விளக்குதற்குப் பயன்படுகிறது. தாம் கையாளும் கருவியைக்கொண்டு மற்றொருவரை டாக்டர் என்று நாம் அறிந்துகொள்ள முடியும்.

அதே முறையில் சமய அனுஷ்டானத்துக்குரிய புறச்சின்னம் சமய உணர்ச்சியை வளர்க்கிறது. சைவன் ஒருவன் நெற்றியில் திருநீறு பூசுகின்றபொழுது உடல் நிலையற்றதென்றும் உள்ளிருக்கும் ஆத்மாவே நிலைபேறு உடையதென்றும் உணரவேண்டும். நீறு பூசியவர்களைப் பார்க்கும்பொழுதெல்லாம் இவ்வெண்ணம் உள்ளத்தில் உதிக்க வேண்டும். ஆனால் பலருக்கிடையில் நாளடைவில் அத்தகைய எண்ணம் மறைந்துபட்டுப் போகிறது. நெற்றியில் ஏதேனும் ஒரு சின்னத்தை அணிவது வெறும் சமுதாயப் பழக்க வழக்கமாக மாறிவிடுகிறது. உடை அணிவது ஒரு பழக்கமாக இருப்பது போன்று சமயச்சின்னத்தை அணிவதும் ஒரு வெறும் பழக்கமாய்விடுகிறது. அப்பொழுது அதில் பயன் ஒன்றும் உண்டாவதில்லை. வக்கீல் உடை அணிந்திருப்பவர்கள் எல்லாரும் திறமை வாய்ந்த வக்கீல்களாக இருக்கிறார்களென்று உறுதிகூற முடியாது. உடல் நாடியை உணரும் கருவியைக் கையில் வைத்திருப்பவர்களெல்லாம் நல்ல டாக்டர்கள் என்றும் முடிவு கட்டி விடலாகாது. அதே விதத்தில் நீறுபூசியவர்களெல்லாம் நல்ல சைவர்களென்றோ திருமண் சாத்தியவர்களெல்லாம் நல்ல வைஷ்ணவர்கள் என்றோ நாம் முடிவுகட்டலாகாது. புறச்சின்னத்தின் மூலம் மக்கள் எந்தச் சமயக்கூட்டத்தைச் சேர்ந்தவர்கள் என்று வகைப்படுட்துகிறோம். அப்படி வகைப்படுத்துற்குப் புறச் சின்னம் முதலில் பயன்படுகிறது. மனத்தைப் பண்படுத்துதற்கும் அது தூண்டுகோலாக அமையுமானால் புறச்சின்னம் முற்றிலும் வேண்டப்படுவதேயாம். வெறும் வெளிவேஷமாக மட்டும் அது நின்றுவிடுமாகில் புறச்சின்னம் அணிந்திருப்பதும் அணியாதிருப்பதும் ஒன்றேயாம். அதை அணியாதிருப்பதை முன்னிட்டு ஒரு சிலரைச் சமயப்பற்று அற்றவர் என்றும், அணிந்திருப்பதை முன்னிட்டுச் சமயப்பற்று உள்ளவர் என்றும் முடிவுகட்டுவது பொருந்தாது. புறச் சின்னத்தை மட்டும் பார்த்து ஏமாற்றம் அடைந்துவிடாதே என்னும் கோட்பாட்டை.

**மழித்தலும் நீட்டலும் வேண்டா உலகம்**
**பழித்தது ஒழித்து விடின்**

என்று வள்ளுவர் எச்சரிக்கை செய்கிறார். துறவறத்தைக் குறித்து அவர் செய்கிற எச்சரிக்கும் சமய அனுஷ்டானத்துக்கும் பொருந்தும். கோபுரம் ஒன்று கடவுள் வழிபாட்டைப் பற்றிய ஞாபகம் ஊட்டுவது போன்று சமயத்தவர்கள் அணியும் புறச்சின்னங்களும் இறைவனுடைய ஞாபகத்தைத் திரும்பத் திரும்ப ஊட்டி வருமாகில் சின்னங்கள் அணிவதில் பயன் உண்டு.

மனபரிபாகம் அடைவதே வாழ்க்கையின் குறிக்கோள், மானுட ஜன்மம் வெறும்சுகஜீவனத்துக்காக என்று அமைந்ததல்ல. உலகிலுள்ள உயிர்களனைத்தும் தத்தம் போக்கில் சுகஜீவனம் செய்து வருகின்றன. மனிதனும் மற்ற உயிர்கள் போன்றோ அவைகளுக்கு மேலாகவோ சுகஜீவனம் செய்து வரலாம். ஆனால்

சுகஜீவனத்திலும் மேலானது ஒன்று மனிதனுக்கு உண்டு. அது முற்றிலும் மனபரிபாகத்தை யொட்டியது. மனபரிபாகத்திலே மனிதன் ஓங்குமளவு அவன் மேலோன் ஆகிறான். அதில் தாழ்வுறுமளவு அவன் கீழோனாகிறன். மனத்தைப் பண்படுத்துவதற்கென்றே சமய அனுஷ்டானங்கள் அனைத்தும் அமைந்திருக்கின்றன. உடலை வளர்த்து உறுதிப்படுத்துவதற்கு நாம் உணவு உண்கிறோம். அதே முறையில் உள்ளத்தைப் பண்படுத்துவதற்கு நாம் சமய அனுஷ்டானங்கள் செய்கிறோம். அவ்வனுஷ்டானங்களில் பல நாளடைவில் வெறும் யந்திரத்தின் செயல்கள் போன்று பொருளற்றவைகளாய்ப்போய்விடுகின்றன. மனத்தை அவைகள் சிறிதேனும் மாற்றியமைப்பதில்லை. அத்தகைய உணர்வற்ற நிலையில் மனிதன் நின்று விடுகின்றபொழுது சமய அனுஷ்டானத்தால் அவன் ஒரு நலனும் அடைவதில்லை. உண்டு உடலை வளர்ப்பது போன்றும் தேகப்பயிற்சி செய்து உடலை உறுதிப்படுத்துவதுபோன்றும் சமய சாதனங்கள் பல புரிந்து உள்ளத்தை உயர்நிலைக்குகொண்டு வரவேண்டும். மனத்தை முறையாகப் பண்படுத்துபவனே சைவன்.

## முதல் படி

ஒரு நாட்டில் வாழ்ந்துவரும் மனிதன் விரும்பினால் மற்றொரு நாட்டுக்குக் குடிபோகலாம். அதன் பொருட்டு அவன் தன்னை ஆயத்தப்படுத்த வேண்டும். எந்த நாட்டுக்குப் போகிறானோ அந்த நாட்டிலுள்ள சட்டதிட்டங்களுக்கும், ஒழுங்குப்பாடுகளுக்கும் ஒத்திருப்பவனாகத் தன்னை அமைத்துக்கொள்வது முதற்கடமை. அந்த நாட்டிலுள்ள மொழியைக் கற்றுக்கொள்ள அவன் கடமைப்பட்டவனாகிறான். அங்கிருக்கும் ஆட்சி முறைக்கும் அவன் உட்பட்டவன் ஆக வேண்டும். அப்பொழுதே அப்புதிய நாட்டில் அவன் குடிமகன் ஆக முடியும், எப்பொழுதும் ஏற்கனவே வாழ்ந்து வரும் நாட்டைவிடக் குடிபுகுகிற நாடு மேலானதாக இருக்கவேண்டுன். அப்படியில்லையேல் குடிபோவதில் பயனில்லை. மக்களாகிய நாம் பூலோகத்தில் வாழ்ந்து வருகிறோம். நம்முள் யாரெல்லாம் சைவர்களோ அவர்கள் சிவலோகத்துக்குக் குடிபோக விரும்புவார்கள். அத்தகைய விருப்பமில்லாதவர்கள் சைவர்களல்லர். சிவலோகத்தை அடையும் பண்பை சாலோக்கியம் என்கிறது சாஸ்திரம். அதாவது அந்த லோகத்துக்கு முற்றிலும் தகுதியுடையவனாகத் தன்னைத் திருத்தியமைத்துக்கொள்ள வேண்டும். இனி சிவலோகம் எங்கே இருக்கிறது என்பது கேள்வி. சிவபெருமான் இருக்குமிடமெல்லாம் சிவலோகம். அவர் நீக்கமற எங்கும் நிறைபொருள். ஆதலால் அண்டங்களனைத்தும் சிவலோகமே. மனபரிபாகம் அடைகிறவஹுக்கு இருக்குமிடமெல்லாம் சிவலோகம். ஸ்ரீ ராமன் இருக்குமிடமெல்லாம் அயோத்தி ஆவது போன்று சிவபக்தனுக்குத் தான் இருக்குமிடமெல்லாம் சிவலோகமாகக் காட்சி கொடுக்கும். அதை அடைவதற்கான முறையைச் சைவ ஆச்சாரியர்களுள்

ஒருவராகிய மாணிக்கவாசகர் காட்டியருள்கிறார் நமசிவாய வாழ்க நாதன் தாள் வாழ்க என்பது முதல் படி. சிவலோகத்தில் வாழ விரும்புகிறவன் ஆங்கு வழங்கி வரும் மொழியை முதலில் கற்க வேண்டும். மொழியோ மிக எளியது. நமசிவாய என்னும் ஐந்தெழுத்தைக் கொண்டது அச்சொல். அனந்தங்கோடி சொற்களையுடைய மொழிகளின் கோட்பாடுகளெல்லாம் இந்த ஐந்தெழுத்தில் அடங்கி விடுகின்றன. இதை ஓயாது ஓதி வருகிறவன் சிவலோகத்தில் வாழ ஆரம்பிக்கிறான்.

உயிர்வகைகளுள் சொல்லைக் கையாளுதல் மனிதனிடத்துள்ள சிறப்பு ஆகும். மற்ற உயிர்வகைகள் ஓலமிட்டுத்தமது உணர்வுகளைத் தெரிவிக்கின்றன. பேசும் திறமையோ மனிதனுக்குரியது. பேசக்கற்றுக்கொள்ளுதலே மானுடச் சிசு கற்கும் முதற்பாடம் ஆகிறது. பேச்சின் மூலம் மனிதன் மனிதனோடு தொடர்பு வைக்கிறான். சைவன் ஒருவன் சர்வகாலமும் சிவநாமத்தை ஓதிக்கொண்டிருக்க வேண்டும். அதன் உட்பொருள் அவனுக்கு விளங்காது நிலையிலும் அதையே அவன் ஓதுதல் வேண்டும். மனது வேறு எண்ணங்களில் அலைந்து திரிகின்ற வேளையிலும் ஐந்தெழுத்தை ஓதுவதினின்று அவன் பிறழ்ந்து போய்விடலாகாது. 'நற்றவா உனை நான் மறக்கினும் சொல்லு நா நமசிவாய' என்பது ஆணை. மனிதனுடைய அமைப்பில் மனம், வாக்கு, காயம் என்னும் மூன்று பகுதிகளிருக்கின்றன. இம்மூன்றனுள் நடுவிலிருப்பது வாக்கு. உள்ளிருக்கும் மனத்தை எட்டவும் வெளியிலிருக்கும் காயத்தோடு தொடர்பு வைக்கவும் வல்லது வாக்கு. நாவில் எழுகிற சொல் சிவனுக்கு உரியதாக இருக்குமாகில் உள்ளிருக்கும் சிந்தையும் புறத்தில் சரீரமயமாயிருக்கும் செயலையும் சிவனுக்கு உரியவைகளாக அது செய்துவிடும். எனவே,

**சிவசிவ என்கிலர் தீவினை யாளர்**
**சிவசிவ என்றிடத் தீவினை மாளும்**
**சிவசிவ என்றிடத் தேவரும் ஆவர்**
**சிவசிவ என்னச் சிவகதி தானே**

என்னும் கோட்பாடு பிறந்துள்ளது. யாண்டும் சிவநாமத்தை ஓதிக்கொண்டிருப்பவனே சைவன்.

சிவநாமத்தை ஓதுதலுக்கு நாமஜபம் என்று பெயர். ஜபத்தின் மூலம் தெய்வத்தை நாம் எட்டிவிடலாம். நெடுந்தூரத்திலிருக்கும் மனிதன் ஒருவனை நாம் காணமுடியாது. ஆனால் அவன் விலாசம் தெரிந்தால் அவனோடு கடிதப் போக்குவரத்து வைத்துக்கொள்ளலாம். சேய்மையிலிருப்பவனை அண்மைக்குக்கொண்டு வருவதற்கு அதுவே உற்ற உபாயம். அக்ஞானத்தில் இருக்கின்றவர்களுக்குச் சிவன் எங்கேயோ தூரத்திலிருப்பவராகிறார். ஆனால் அவருடைய நாமத்தை நாவில் இருக்கச் செய்துவிட்டால் இறைவன் பக்கத்தில்

வந்து விடுகிறார். ஏனென்றால் இறைவன் வேறு அவருடைய பெயர் வேறு அல்ல. பரம்பொருளின் பெயர் பரம்பொருளிலும் பெரியது என்பது கோட்பாடு. பெயரைச் சிக்கெனப்பிடித்துக்கொள்பவன், பொருளைப் பிடித்துவிடுவது திண்ணம். இறைவனுடைய நாமஜபம் ஆத்ம சாதனங்களுள் எல்லாம் மிக எளியது. எல்லா வேளைகளிலும் அதைக் கையாளலாம். எவ்விடத்திலும் அதை ஓதலாம். எல்லாச் சந்தர்ப்பங்களும் அதற்குப் பொருத்தமானவைகளே. 'உருஏறத் திருஏறும்' என்பது ஆன்றோர் வாக்கு. இறைவனுடைய நாமத்தை உருப்போட்டுக்கொண்டே இருந்தால் இறைவனுடைய மகிமைகளெல்லாம் படிப்படியாக உருப்போடுபவனுக்குச் சொந்தமாகின்றன. நாமஜபம் செய்வதில் மூன்று படித்தரங்கள் உண்டு. சொல் புறத்தே கேட்குமாறு உதடு அசைந்து ஓதுவது ஸ்தூல ஜபம். அதன் வலிவு மூன்றாம் தரமானது. உதடு அசைவதில்லை; நா மட்டும் உள்ளே அசைகிறது; ஓசை ஒன்றும் வெளியில் வருவதில்லை. இது சூக்ஷ்மஜபம். வல்லமையில் இது இரண்டாம் தரமானது. நாவும் அசைவதில்லை; உதடும் அசைவதில்லை. மனம் மட்டும் தனக்குத்தானே 'நமசிவாய' என்று சொல்லிக்கொள்கிறது. இது காரணஜபம். வல்லமையில் இது முதல் தரமானது. இனி, இம் மூன்றுக்கும் புறம்பான முறை ஒன்று உண்டு. மனிதன் தனியாய் இருந்துகொண்டு அல்லது மற்ற பக்தர்களோடு கூடியிருந்துகொண்டு இறைவனுடைய நாமத்தை உரக்க ஓதுதல் அது. அப்படிச் செய்வதன் மூலமாகவும் பக்தன் தன்னைப் பக்குவப்படுத்துகிறான்.

ஓயாது இறைவனுடைய திருநாமத்தை ஓதிக்கொண்டிருப்பவன் நாளடைவில் ஜபசித்தியடைகின்றான். அப்பொழுது மனதில் ஒருபகுதி நாமத்தை ஓதுவதிலேயே ஈடுபட்டுவிடுகிறது. தைலதாரை போன்று இடையீடின்றி நாம உச்சாரணை நிகழ்ந்துகொண்டே இருக்கும். வாழ்க்கையில் திடீரென்று விபத்துக்கள் வருவது சர்வ சாதாரணம். நாமத்தை ஓதுவதில் மனிதன் எவ்வளவு தூரம் முன்னேற்றம் அடைந்திருக்கிறான் என்பதை விளக்குதற்கு விபத்துக்கள் உதவுகின்றன. சாகும்பொழுது 'சங்கரா' என்று சொல்ல வாய்க்காது. காலமெல்லாம் அதை ஓதிப்பழகியிருப்பவனுக்கே மரணவேளையிலும் அதை ஓத முடியும். கிளிப்பிள்ளைக்கு 'நம சிவாய' என்று ஓதக் கற்பிக்கலாம். அதுவும் அச்சொல்லை உச்சரித்துக்கொண்டிருக்கும். திடீரென்று பூணை தோன்றினால் இப்புனிதச் சொல் மாயமாய் மறைந்து போய்விடும். 'கர் கர்' என்னும் கிளிக்குச் சொந்தமாயுள்ள ஓலமே வெளிக்கிளம்பும். மனபரிபாகம் அடையாதிருக்கும் மனிதன் ஆபத்து வேளையில் இறைவனுடைய திருநாமத்தை ஓதான். வேறு ஏதோ சொற்களை அவன் உளர ஆரம்பித்து விடுவான். ஆனால் ஜப சித்தியில் ஊறியிருப்பவன் எல்லா வேளைகளிலும் இறைவனுடைய திருநாமத்தையே ஓதிக்கொண்டிருப்பான். அப்படி ஓதுதல் மூலம் மற்றொரு பண்பாட்டை அவன் பெறுகிறான். ஐந்தெழுத்துக்கு இலக்காயிருக்கும் பொருள் தனக்கும் பிரபஞ்சத்துக்கும் நாதனாயிருக்கிறார் என்பதை அவன் உணர்கிறான். அத்தகைய உணர்ச்சி அவனுடைய வாழ்க்கையில்

பெரிய மாறுதலை உண்டு பண்ணுகிறது. பள்ளிக்கூடத்தில் ஆசிரியர் இருக்கிறார் என்பதை உணர்கிற மாணாக்கர்கள் ஒழுங்காக நடந்துகொள்கின்றனர். அவர்களை ஒழுங்குபடுத்தும்பொருட்டு ஆசிரியர் வாய் திறந்து ஒன்றும் பேச வேண்டியதில்லை. அவருடைய முன்னிலை ஒன்றேபோதுமானது. அதே விதத்தில் அண்டங்களனைத்துக்கும் நாதனாக இறைவன் இருக்கிறார் என்பதை உணர்கிற பக்தன் இறைவனுடைய விருப்பத்துக்கு ஒப்பத் தன்னுடைய வாழ்வைப் பண்படுத்துகிறான். மேன்மை தங்கிய நாடு ஒன்றிலே குடிமகனாயிருப்பவன் அந்த நாட்டின் சட்டத்திட்டங்களை முறையாகப் பழக்கத்தில் கொண்டுவருவது போன்று சைவன் ஒருவன் திருந்தியமைகிறான். சிவலோகத்துக்குரிய சீலமும் ஒழுக்கமும் இயல்பாக அவனிடத்து வந்துவிடுகின்றன. யாண்டும் தனக்குத் தலைவனாக திகழும் சிவனாருக்கு ஏற்புடைய நல்வாழ்கையையே சைவன் வாழ்கிறான். இது அவன் அடைந்துள்ள முதல் படியாகும்.

## இரண்டாவது படி

நல்ல சைவன் ஒருவன் பூலோக வாழ்க்கையைச் சிவலோக வாழ்க்கையாக மாற்றிவிடமுடியும், சிவ நாமத்தை ஓதி சிவனையே நாதன் அல்லது தலைவனாக அங்கீகரிப்பதன் மூலம் இது சாத்தியமாகிறது. ஆனால் வாழ்க்கையின் குறிக்கோல் இத்தகைய நிலையில் நிறைவேறிவுகிறதா என்பது கேள்வி. பூனைக்குட்டி ஒன்று தாய்ப்பூனையின் உதவியைச் சதா சார்ந்திருக்கிறது. அப்படிச் சார்ந்திருப்பதனால் தன்னைப்பற்றிய கவலை அக்குட்டிக்குக் கிடையாது. அதைக் காத்து வரும் பொறுப்பைத் தாய்ப்பூனை வகித்து வருகிறது. ஆனால் குட்டியின் வாழ்க்கை அந்நிலையில் பூர்த்தியாவதில்லை. அது பெரியதாக வளர்ந்து வருகிறது. வளர்தற்கேற்ப அதன் பொறுப்பு அதிகரிக்கிறது. தாயைச் சார்ந்திருந்த குட்டி பிறகு தன்னையே சார்ந்திருக்கப் பழக வேண்டும். தனது வாழ்க்கை அலுவல்களைத் தானே கவனித்துக்கொள்ள அது கடமைப்பட்டிருக்கிறது. சிவபக்தன் ஒருவனுடைய நிலைமையும் அத்தகையது. சாதனத்தில் அவன் குழந்தைப் பருவத்தில் இருக்கிறபொழுது கடவுளையே சார்ந்திருக்கிறான். நாதன் ஆகிய அவருடைய துணையை நாடியிருக்கிறான். அதற்குமேல் அவன் அடையவேண்டிய பக்குவம் இருக்கிறது. ஆயுட்கால மெல்லாம் பெற்றோர்க துணையை நாடியிருப்பவன் பெரிய மனிதன் ஆகான். தனக்கு வயது வரும்பொழுது பெற்றோரைச் சார்ந்திருத்தல் என்னும் நிலை பெற்றோருக்கு பணிவிடை செய்தல் என்னும் நிலையாக மாறுகிறது. வயது வந்துள்ள மகன் ஒருவன் தாய் தந்தையருக்குத் தொண்டு செய்யாது அவர்களுடைய ஆதரவையே ஆயுட்காலமெல்லாம் நாடியிருக்கலாகாது. அப்படியிருப்பவன் பரிகாசத்துக்கு உரியவனாகின்றான்; வாழ்வாங்கு வாழ்பவன் ஆகமாட்டான். ஆத்ம சாதனம் செய்கின்ற சைவன் ஒருவன் சிவனார் செய்கின்ற செயலை முதலில் அறிந்துகொள்ள வேண்டும். பிறகு அச்செயலில் தனக்கு

அமைதுள்ள் பொறுப்பையும் ஏற்றுக்கொள்வது அவசியம். அவன் எதைச் செய்ய வேண்டும், எதைச் செய்யலாகாது என்பதையும் பாகுபடுத்துவது அவசியமாகிறது. இக்கோட்பாட்டை,

**நாடகத்தால் உன் அடியார் போல்நடித்து நான்நடுவே**
**வீடகத்தே புகுந்திடுவான் மிகப்பெரிதும் விரைகின்றேன்**
**ஆடகச்சீர் மணிக்குன்றே இடையறா அன்புனக்கென்**
**ஊடகத்தே நின்றுருகத் தந்தருளெம் உடையானே.**

வாழ்க்கையில் இரண்டு பகுதிகளிருக்கின்றன. இப்பிரபஞ்சத்துக்குரிய பகுதி ஒன்று; பரமசிவத்துக்குரிய பகுதி மற்றொன்று. நல்ல பக்தன் சிவத்துக்குரிய பகுதியை வாழ்க்கைக்கென்றே அமைந்ததாக வைத்துக்கொள்ள வேண்டும். பின்பு இவ்வுலகுக்குரிய பகுதியை வெறும் விளையாட்டாக அல்லது நாடகமாகக் கருதவேண்டும். நாடகத்தில் வேந்தனாக நடிப்பவன் உண்மையில் வேந்தனல்லன். தான் ஒரு வேந்தன் என்று எண்ணி நாடகக்காரன் ஏமாற்றம் அடைவதில்லை. நாடகத்திலே வறியனாக நடிப்பவன் உண்மையில் வறியனல்லன். தான் சிறுமையடைந்திருப்பது போன்று அவன் பாசாங்கு செய்கிறான். பக்தர்களில் பெரும்பான்மையோர் உலக வாழ்க்கையை மெய்யானதாக வைத்துக் கொள்கிறார்கள். இறைவனைச் சார்ந்திருக்கும் விஷயத்திலும் இறைவனுடைய திருவுளத்துக்கு ஒப்பத் தங்களைப் பண்படுத்தும் விஷயத்திலும் வெறும் நாடகக்காரர்கள் ஆகி விடுகிறார்கள். நாடகமாக நடிக்கும் சில செயல்களுக்கு அடிப்படையாயிருக்கும் மனப்பான்மையைப் படம் பிடித்துப் பார்க்க வேண்டும்.

பருவம் வந்துள்ள யுவன், யுவதி ஆகிய இருவருக்கும் மணம் நிகழ்கிறது. அதன் பொருட்டு இரண்டு வீடுகளுக்குரிய கூட்டத்தார்கள் பெருமிதமாகக் கூடியிருக்கின்றனர். அவர்களுக்கிடையில் வாளாவிருந்து வயிறு வளர்க்கும் சிற்றியல்புடைய மனிதன் ஒருவன் சேர்ந்துகொண்டான். மணச்சடங்குகளில் ஈடுபட்டிருப்பவன் போன்று நடித்து வேண்டியவாறு உண்டு திருப்தியடைந்து வந்தான். துவக்கத்தில் இரண்டொரு நாளைக்கு அவன் செயல் இனிது நிறைவேறியது. பெண்வீட்டார் அவனை மாப்பிள்ளை வீட்டாரைச் சேர்ந்தவன் என்று எண்ணினார்கள். மாப்பிள்ளை வீட்டாரோ அவனைப் பெண் வீட்டைச் சேர்ந்தவனென்ன்று நினைத்தார்கள். இருவீட்டாரும் அவனைப் பற்றிக் கலந்து பேச அரம்பித்தபொழுது உண்மை வெளியாயிற்று. உடனே அப்போலி மனிதனும் அவ்விடத்தைவிட்டுப் புறப்படவேண்டியதாயிற்று. கடவுளிடத்துப் பக்தி பண்ணுகிறவர்களுள் தங்களை முறையாகப் பக்குவப்படுத்துபவர் யார், பக்குவம் அடைவதில் ஆர்வமில்லாதவர்கள் யார் என்பது வெளியாக வேண்டும். பந்தாட்டம் ஒரு நல்ல விளையாட்டு. திறமை வாய்ந்தவர்கள் இருவர் ஒருவரோடு ஒருவர் போட்டிபோட்டு விளையாடுகின்றனர். விளையாட்டுத் திறனை விதவிதமாக

வெளிப்படுத்திக் காட்டுவது ஆற்றல் படைத்தவர் செயல். திறமைகளையெல்லாம் வெளிப்படுத்துவதன் மூலம் பந்தாட்டத்தைப் பார்வையிடும் ஆயிரக்கணக்கானபேரை மகிழ்விக்கின்றனர். வெற்றி யாருக்கு என்பதில் விளையாட்டுத் திறமை படைத்திருப்பவர்களுக்குக் கவலையில்லை ஆனால் அத்தகைய திறமையில்லாத இருவர் விளையாடும் பொழுது வெற்றியிலேயே கண்ணும் கருத்துமாயிருப்பார்கள். எப்படியாவது வெற்றிபெற்றுவிடவேண்டுமென்று கருதி விளையாடுபவன் விளையாட்டு வல்லுநன் ஆகான். அதே விதத்தில் இறைவனுடைய அடியார்களுள் எப்படியாவது முக்தி அல்லது வீடகத்தைப் பெற்றுவிட விரும்புபவன் நல்ல அடியவன் ஆகான். வாழ்வில் முழுப்பயனையும் பெற்றவனும் அவன் ஆகான். நலமனைத்துமுடைய நல்லான் ஒருவனைக் காண அன்பர் சிலர் போகின்றனர். அப்படி அவர்கள் வந்தபொழுது அந்த நல்லான் தன் தோட்டத்திலே வேலை செய்து கொண்டிருந்தான். வந்தவர்களை இனிது வரவேற்று அவர்களோடு பேசி உபசரித்துக்கொண்டிருப்பதற்கிடையிலும் தனது வேலையை நிறுத்தாது செய்துகொண்டு இருந்தான். பார்க்கவந்தவர்களும் வெவ்வேறு வேலை செய்து அவனுக்குத் துணைபுரிந்தனர். நல்லானோடு இணக்கம் வைத்த மற்ற நல்லவர்கள் செய்யக்கிடந்த செயலும் அதுவேயாம். ஒருவன் வேலை செய்து கொண்டிருப்பதைப் பார்ர்துக்கொண்டு மற்றவர்கள் வெறும் வாய்ப்பேச்சுக்காரர்களாக இருப்பது பொருந்தாது. நண்பனுடைய வேலையில் கலந்துகொள்ளாவிட்டால் அவர்களுடைய நட்பு வெறும் நாடகமாகப்போய்விடும். இறைவனோடு தொடர்பு வைத்துப் பழகுகிறவர்கள் அவருக்குப் பக்கத்தில் வந்துவிடுகின்றனர். இறைவனுக்கு அருகில் வரும் நிலையை சாமீப்யம் என்று சாஸ்திரம் சாட்டுகிறது. இறைவனுக்குச் சமீபத்தில் வந்திருக்கிற சைவன் ஒருவன் தான் கொண்டுள்ள அன்பைச் செயலில் காட்டவேண்டும். அப்படிச் சைவன் ஒருவன் செய்யக்கிடக்கும் செயல் யாது என்னும் கேள்வி பிறக்கலாம். 'ஆடகச்சீர் மணிக்குன்றே' என்று இறைவன் அழைக்கப்படுகிறார். நடராஜப் பெருமானே என்பது அதன் கருத்து. உலகனைத்துக்கும் சபேசனாக இருந்துகொண்டு உலகிலுள்ள கிருத்தியங்களையெல்லாம் சீருடன் செலுத்துதல் சிவன் செயல். ஒழுங்குப்பாட்டினின்று பிரபஞ்சத்தின் நடைமுறை சிறிதேனும் பிறழுவதில்லை. பஞ்சகிருத்தியங்களை விளையாட்டாக அவர் செய்கிறார். அதற்கிடையில் நமது பெருநிலையினின்று அவர் பிசகுவதில்லை. ஆதலால் அவர் மணிக்குன்று. அண்டங்கள் யாவையும் தாமுளவாக்குதலும் அவைகளை நிலைபெறச் செய்தலும் உரியகாலத்தில் அவைகளை ஒடுக்குதலும் அதற்கிடையில் உயிர்வகைகளினிடத்திருந்து உண்மையைச் சிறிது மறைத்து வைத்திருப்பதும், பிறகு வழுத்துபவர்க்கு அருள் புரிவதும் ஆகிய பஞ்ச கிருத்தியங்கள் அவருடைய அலகிலா விளையாட்டு. அவருடைய பெரிய விளையாட்டிலே பங்கெடுத்துக் கொள்கிறவர்களே அவருடைய உண்மையான பக்தர்கள் ஆகிறார்கள். சரீரம்

எடுத்துப் பிரபஞ்சத்துள் வைத்திருப்பது வெறுமனே வீண் காலம் போக்குதற்பொருட்டு அன்று. அனந்தங்கோடி உயிர்களின் மூலமாக இறைவன் தமது பெரிய கிருத்தியங்களை நிறைவேற்றி வருகிறார். தமக்கென்று அமைந்த பொறுப்பை இறையனாருடைய பெருந்திட்டத்தின் ஒரு சிறு பகுதி என்று கருதி அதை அவர் பொருட்டே ஊக்கத்துடன் செய்து வருபவனே நல்ல சைவன்.

உலகில் நாம் ஏன் பிறந்திருக்கிறோம் என்பதே பலருக்குத் தெரியாது. தேகப்பயிற்சி செய்து ஒருவன் உடலை உறுதிப்படுத்துவது போன்று வாழ்க்கையில் தனக்கு அமைந்துள்ள கடமைகளையெல்லாம் அண்டவனுடைய அரும்பணியாகக் கருதி அச்செயல்களைத் திறம்பட நிறைவேற்றி வருபவனே சிவனாருக்குரிய பக்தன் ஆகிறான். தொண்டர்கள் எல்லாரும் திருத்தொண்டர்கள் ஆனது தெய்வத்துக்குப் பணிவிடைகள் செய்ததன் மூலமேயாம். வாழ்க்கையில் அவரவர்க்கு அமைந்த பணியினின்று திருத்தொண்டர்கள் பிறழ்ந்துபோய்விடவில்லை. செயல்களுள் பெரியவை, சிறியவை என்னும் பாகுபாடும் இல்லை. எக்குடியில் பிறந்து எச்செயலைச் செய்யும் வாய்ப்பு ஒரு தொண்டருக்கு அமைந்ததோ அவர் அதை ஈசனுடைய அரும்பணியாகக் கருதி ஆயுட்காலமெல்லாம் ஆற்றி வந்தார். 'இந்தக் கருமத்தினின்று எனக்கு எப்பொழுது விடுதலை கிடைக்கும்? என்று தொண்டருள் யாரும் பெம்மானிடம் விண்ணப்பித்தது கிடையாது. தொண்டுபுரிவதே அவர்களுக்குச் சிவ வழிபாடு ஆயிற்று. அதில் அவர்கள் பேரானந்தம் அடைந்திருந்தனர்.

நல்ல வேலைக்காரன் ஒருவன் எஜமானிடம் தன் சம்பளத்தைப்பற்றிப் பேச்சு எடுப்பதில்லை. எஜமானன் சம்பளத்தை முறையாகத் தராததை முன்னிட்டு அவன் குறை கூறுவதில்லை. எஜமானன் பக்கத்தில் இருந்தாலும் இல்லாவிட்டாலும் தன்வேலையில் அவன் வஞ்சகம் செய்வதில்லை. எஜமானனோடு அதிகம் பேச்சு வைத்துக்கொள்வதும் இல்லை. தன் கருமத்திலேயே அவன் கண்ணும் கருத்துமாயிருக்கிறான். அவன் போன்று அல்லாது மற்றொரு வேலைக்காரன் எஜமானனைக் காண்கின்றபொழுது முகஸ்துதி செய்கிறான். அவர் இல்லாத வேளையில் வேலை செய்யாது வெறுமனே இருந்துவிடுகிறான். தனக்குச் சம்பளம் அதிகரிக்க வேண்டுமென்று என்னென்னவோ சாக்குச் சொல்லி விண்ணப்பிக்கிறான். இந்த இரண்டுவித வேலைக்காரர்களுள் யாரிடத்து எஜமானனுக்கு உண்மையான அபிமானம் உண்டாகும்? நமக்கு எஜமானனாயிருப்பவன் சிவன். நம்மில் ஒவ்வொருவருக்கும் ஒவ்வொருவிதமான வேலையை அவர் கொடுத்து வைத்திருக்கிறார். அதை நம் செயல் என்று நாம் கருதலாகாது. நம் தலைவனாகிய சிவனார் செயல் அது என்று உறுதிகொண்டிருக்க வேண்டும். அவரிடத்து நாம் கொண்டுள்ள அன்பையெல்லாம் நம் செயலின் மூலம் விளக்க வேண்டும். இறைவனுக்குத் தொண்டாற்றிக் கீழ்மையடைந்தவர் யாருமில்லை. இறைவனுக்குத்

தொண்டு ஆற்றுமளவு தொண்டனுடைய ஆற்றல் வளருகிறது. இறைவன் யாண்டும் தனக்குச் சமீபத்திலிருப்பதாகவே அத்தொண்டன் உணர்கிறான். முக்தி என்னும் சம்பளத்தைக்கேளாது இறைவனுக்கு எத்தனை பிறவிகளில் வேண்டுமானாலும் இடையறாது பணிவிடை செய்துகொண்டிருக்க உள்ளன்போடு விரும்புகிறவனே நல்ல சைவன்.

## மூன்றாவது படி

'தகப்பனைப்போன்று பிள்ளை' என்பது கோட்பாடு. தந்தையே மற்றொரு வடிவெடுத்து மைந்தனாக வருகிறான். ஆதலால் தந்தைக்கும் மைந்தனுக்கும் இடையில் ஒற்றுமைக்ள் பல இருந்தாக வேண்டும். அவர்களுக்கிடையில் உடலமைப்பு பெரிதும் ஒத்திருப்பது தேற்றம். அதற்குமேல் தன்மையிலும் ஆற்றலிலும் ஒற்றுமையிருந்தாக வேண்டும். பிதாவிடத்துப் போற்றுதற்குரிய பண்புகள் இருக்குமாகில் அவை யாவற்றையும் புத்திரனிடத்தும் எதிர்பார்ப்பதே முறை. பண்பில் தந்தைபோன்று மைந்தான் அமையாவிட்டால் அது இருவருக்குமே இழுக்கு ஆகும். மேலாம் தன்மையிலே தந்தைக்கு மீறியவனாக மைந்தான் இருப்பானாகில் அச்சிறப்பு போற்றுதற்குரியதாகும். கந்தவேளுக்குத் தகப்பன்சுவாமி என்பது ஒரு பெயர். ஏனென்றால் தெய்விகப் பண்பிலே தந்தைக்கு மிக்கானாக அவன் தென்பட்டான். மைந்தர்கள் எல்லாரும் கந்தன் போன்று ஆகக் கடமைப் பட்டிருக்கின்றனர்.

அரும்பாடுபட்டு தகப்பன் மகனுக்காகச் செல்வம் தேடி வைக்கிறான்; அப்படித் தனக்கென்று தேடிவைத்த செல்வத்தைப் பாதுகாத்து வைப்பதோடு மகன் திருப்தியடையலாகாது. அப்பன் எடுத்துக்கொண்ட சிரமத்துக்குமேல் அதிகமான சிரமத்தை மகன் மேற்கொள்ள வேண்டும். தந்தை படைத்துள்ள ஆற்றலிலும் மிகுந்த ஆற்றலை மகன் படைத்திருப்பது போற்றத்தக்கது. இனி, ஆபத்து நேரும் இடத்தும், இன்னல் நேருமிடத்தும் ஒருவன் எப்படி நடந்துகொள்கிறானோ அதனின்று அவனுடைய பண்பாடு வெளியாகும். வாழ்க்கை அமைதியும், இனிமையும் வடிவெடுத்திருக்கும் பொழுது அதை யாரும் ஒழுங்காகக் கொண்டுசெலுத்திவிடலாம். ஆனால் வாழ்க்கையிலே இடர்கள் பலதோன்றுமிடத்து அவற்றினின்று மனிதன் எப்படி மீளுகிறான் என்று பார்க்க வேண்டும். இடர்பாடுகள் இடையிடையே தோன்றாத வாழ்வை இவ்வையகத்தில் யாரும் எதிர்பார்க்கலாகாது. அந்நெருக்கடிகளில்தான் அவனுடைய பண்பு நன்கு விளங்கும். மீளுதற்கரிய நெருக்கடிகள் பலவற்றினின்று தந்தை ஒருவன் தீவிரமான முயற்சியெடுத்து மீண்டவன் என்று வைத்துக் கொள்வோம். அவனுடைய மைந்தனுக்கு அத்தகைய நெருக்கடி நேருங்கால் அவனும் தன் தந்தையைப்போன்றே திறமையுடன்

கஷ்டதசையைச் சமாளிக்கக் கடமைப்பட்டிருக்கிறான். அப்பொழுதுதான் அவன் தந்தைக்கேற்ற மைந்தனாகின்றான்.

டாக்டர் ஒருவர் ஒரு மனிதனுடைய உடல் நலத்தை ஆராய்ச்சி பண்ணிக்கொண்டிருக்கிறார். உடலின் உள்ளும் புறமும் நோய் ஒன்றுமில்லாது அது உறுதிப்பாட்டுடன் இருக்கிறதா என்று கூர்ந்து ஆராய்ச்சி பண்ணுகிறார். ஆராய்ச்சி பண்ணப் பெறுகிற மனிதன் டாக்டருடைய ஆராய்ச்சிக்கு உடலை ஒப்படைத்துவிட்டுத் தன் போக்கில் பாராமுகமாக நின்று கொண்டிருக்கிறான். அப்பொழுது அவன் எதிர்பாராதிருக்கும்போது டாக்டர் திடீரென்று அவனுடைய நெஞ்சில் ஓங்கி ஒரு குத்துவிடுகிறார்! அதற்கு எத்தகைய எதிர்ச்செயல் அம்மனிதனிடத்து வருகிறதோ அதிலிருந்து அவனுடைய உடல் திட்பத்தை அவர் உறுதி கட்டுகிறார். 'நெஞ்சின் மீது ஓங்கி ஒரு குத்துவிடப் போகிறேன்' என்று சொல்லிவிட்டு அவர் அங்ஙனம் செய்தால் அம் மனிதன் தன்னை ஆயத்தப்படுத்திக்கொள்வான். அவனுடைய உண்மையான உடல்நிலை அப்போது வெளியாகாது; செயற்கையாக வருவித்துக்கொண்ட ஆண்மையின் வெறும் பகட்டே புலனாகும். வாழ்விலே அதேவிதத்தில் மக்களுக்கு எதிர்பாராதபடி திடீரென்று ஆபத்துக்கள் நேரிடுகின்றன. அல்லது கஷ்டதசைகள் நேரிடுகின்றன. அவைகளைச் சமாளிப்பதினின்று மக்களின் திட்பமும், உறுதியும், தெளிந்த அறிவும் வெளியாகும். தந்தை போன்று மகனும் இருக்கிறானா என்பதைத் திடீரென்று வருகிற விபத்து விளக்கிவிடும்.

பக்தன் ஒருவன் கடவுளிடத்துப் பக்தி கொள்ளுதல் மூலம் கடவுளுக்குச் சொந்தமாகிறான்; கடவுளையும் தனக்குச் சொந்தமாக்குகிறான்; அப்படி அவன் அடைகின்ற பண்பிலே மூன்றாவது படியில் வந்து நிற்பது சாரூப்யம் என்னும் நிலை. அதே உருவத்தை அடைந்து விடுவது என்பது அதன் பொருள். கைலாசத்திலிருக்கும் ஆத்மாக்களெல்லாம் சிவனுடைய ரூபத்தையே பெற்றுவிடுகிறார்களாம். தலைவனுடைய வடிவத்தையே அவனை வழிபடுகின்றவர்கள் எடுக்கின்றபொழுது தலைவனுடைய தகைமையும் அவர்களுக்கு அமையவேண்டும். அப்பொழுதே சாரூப்யம் என்னும் சொல்லுக்கு அவர்கள் பொருத்தமானவர்கள் ஆகிறார்கள். வெறும் தோற்றத்தளவில் சிவம் போன்று சைவர்கள் இருந்த்விட்டால் போதாது. தோற்றத்துக்கு ஏற்ற பக்குவமும் பண்பும் அவர்களிடத்து அமையவேண்டும். அப்பண்பு எத்தகையது என்பதை மாணிக்கவாசகர்,

**கோயில் சுடுகாடு கொல்புலித்தோல் நல்லாடை**
**தாயுமிலி தந்தையிலி தான்தனியன் காணேடீ**
**தாயுமிலி தந்தையிலி தான் தனியன் ஆயிடுனுங்**
**காயில் உலகனைத்தும் கற்பொடிகாண் சாழலோ.**

என்னும் திருவாசகத்தில் படம்பிடித்துக் காட்டுகிறார். சைவன் யார் என்னும் கேள்விக்கு ஈண்டு இன்னும் கடினமான சோதனை வந்துள்ளது. 'ஆலயம் தொழுவது சாலவும் நன்று' கருதி சிவபக்தன் நாள்தோறும் சிவாலயத்துக்குப் போய்வருகிறான். சிவனார் எழுந்தருளியிருக்கும் இடங்களுள் போய்வருகிறான். சிவனார் எழுந்தருளியிருக்கும் இடங்களுள் முக்கியமானது மயானம். அதற்கு ருத்திரபூமி என்பது மற்றொரு பெயர். பலர் பகலில் தனியாகச் சுடுகாட்டுக்குப் போக அஞ்சுவர். இனி இரவில் அவர்கள் தனியாக அவ்விடத்துக்குப் போவது எங்ஙனம்?

'நள்ளிரவில் நட்டம் பயின்றாடும் நாதனே' என்று இறைவன் அழைக்கப்படுகிறார். சிவபெருமானுடைய சான்னித்தியத்தை உணர விரும்புகிறவர்கள் நடு இரவிலே சுடுகாட்டுக்குச் சென்று அமைதியாகத் தியானம் பண்ணினால் அதைத் தெளிவுபட உணரமுடியும் என்று சான்றோர் சொல்கின்றனர். ஆர்வத்துடன் அவ்வேளையில் ஆங்குச் சென்று தியானம் பண்ண இயலாதவர்கள் சைவர் ஆகார். அத்தகைய அசாதாரணமான செயலைச் சாதகன் ஒருவன் ஏன் செய்யவேண்டும். என்னும் மறுப்பு எழலாம். அது அசாதாரணமான சாதனம் அல்ல. மனபரிபாகம் அடைதற்கு அது முற்றிலும் அவசியமானது. மாலுமி ஒருவன் அமைதியுற்றிருக்கும் கடலிலே தனது கப்பலை விளையாட்டுப் போன்று செலுத்துகிறான். அதைப் பார்த்து அந்த மாலுமியின் திறமையை நாம் அறிந்துகொள்ள முடியாது. கடல் எப்பொழுதுமே அமைதியுற்றிருக்கும் என்னும் நியதி இல்லை. எந்த வேளையில் வேண்டுமானாலும் அதனிடத்துக் கொந்தளிப்பு ஏற்படலாம். கப்பல் இனிது ஓடிக்கொண்டிருக்கிறபொழுது திடீரென்று புயல்காற்று கிளம்புகிறது. சமனாக அமைதியுற்றிருந்த கடல் நிலை குலைய ஆரம்பிக்கிறது. மலைகள் போன்று அடுக்கடுக்காக ஆழித்திரைகள் தோன்றி வருகின்றன. அந்த நெருக்கடியில் மாலுமி என்ன செய்கிறான் என்று பார்க்கவேண்டும். முறையாகக் கப்பலை ஓட்டாவிட்டால் அது உருண்டு மூழ்கிப்போய்விடும். ஆனால் முறையாக அதைச் செலுத்துங்கால் இரண்டு அலைகளுக்கிடையிலே அது விழுங்கப்பட்டது போன்று மறைந்திருக்கலாம். சிறிது நேரத்திற்குள் ஓர் அலையின் மேற்பகுதியிலே வானத்தில் பறப்பது போன்று அது வெளிக்கிளம்பும். அத்தகைய அரிய செயல்களெல்லாம் மாலுமியின் திறனையும் அனுபவத்தையும் பொறுத்தவைகளாம். கடலின் கொந்தளிப்பே மாலுமியின் மாண்பை வெளிப்படுத்துகிறது. சிவபெருமானுடைய ருத்திர வடிவே பக்தனுடைய பண்பை வெளிப்படுத்துகிறது.

சுடுகாட்டைப்பற்றி மக்களுக்கிடையில் தவறுதலான கருத்து ஒன்று உலவி வருகிறது. அதை அவர்கள் எப்பொழுதும் செத்த பிணத்தோடு இணைத்துவைத்தே பொருள்படுத்துகின்றனர். உயிர் வாழ்ந்திருக்கும்பொழுது சுடுகாட்டுக்கும் தங்களுக்கும் எந்த விதமான தொடர்பும் இல்லையென்றே அவர்கள் கருதி வருகின்றனர். பிரேதங்களைப் பொசுக்குதல் பொருட்டு சுடுகாட்டுக்குப்

போகின்றவர்கள் தீட்டுப்பட்டு விட்டதாகவும் எண்ணி வருகின்றனர். பிறகு நீராடிவிட்டால் தீட்டு நீங்கி விடுகிறதென்றும் அவர்கள் நினைக்கின்றனர். இந்த எண்ணம் தத்துவத்துக்கு ஒவ்வாதது. டாக்டர் ஒருவர் பிரேதத்தை அடிக்கடி கையாள்கிறார். அதனால் அவருக்குத் தீட்டு உண்டாவதில்லை. ஆனால் ஆசாரத்தையும் சுகாதாரத்தையும் அடிப்படையாக வைத்துக்கொண்டு அவர் கையை நன்றாகக் கழுவி விடலாம் அல்லது நீராடிக்கொள்ளலாம். அவருக்குத் தீட்டு உண்டாகிவிட்டது என்னும் கொள்கைதான் பொருந்தாது. உற்றார் ஒருவர் உயிர் நீத்த பிறகு அப்பிணத்தைச் சார்ந்தவர்களுக்கெல்லாம் தீட்டு வந்துவிட்டதென்றும் அவர்கள் கோயிலுக்குள் கொஞ்ச நாளைக்குப் போகலாகாது என்றும் உலகத்தவர் கருதி வருகின்றனர். அத்தகைய கொள்கை ஆதரவற்றது. ‘கோயில் சுடுகாடு’ என்னும் கோட்பாடு சிவனாருக்குரியதாகிறது. அவருக்கு அமைந்துள்ள ஆயிரம் பெயர்களுள் ‘ஸ்மசானவாசினன்’ என்பது ஒன்று. சுடுகாட்டிலே சிறப்புற்று மிளிர்பவன் என்பது அதன் பொருள் சிவக்ஷேத்திரங்களுள் தலையாயது காசி. அதற்கு மஹாஸ்மசானம் என்பது மற்றொரு பெயர். அல்லும் பகலும் ஆங்கு ஓயாது பிணங்கள் கங்கைக் கரையில் எரிந்துகொண்டே இருக்கின்றன. அதை முன்னிட்டுக் காசிக்குள் போகிறவர்களுக்கெல்லாம் தீட்டு வந்துவிடுகிறது என்னும் கொள்கை பொருளற்றது. காசிக்குப் போகிறவர்களுக்கெல்லாம் உண்மையில் புனிதமும் பண்பும் பக்தியும் மேம்படுகின்றன.

ஸ்மசானத்துக்குச் செல்வதால் தீட்டு வந்துவிடுகிறது என்னும் கொள்கையை இன்னொரு விதத்தில் இயம்பலாம். இறைவன் உறைவிடத்துக்குச் செல்கிறவனுக்குத் தீட்டு உண்டாகிவிடுகிறது என அக்கொள்கை பொருள்படுகிறது. ஆலயத்துக்குச் சென்று ஒருவன் தனது புனிதத்தை இழந்தால் வேறு எங்குச் சென்று அவன் புனிதத்தைத் திரும்பவும் பெறப்போகிறான்? சுடுகாட்டைச் சரியாகப் பொருள் படுத்தத் தெரிந்துகொண்டவர்களே நல்ல ஆத்ம சாதகர்கள் ஆகிறார்கள். இரவும் பகலும் சேர்ந்து ஒரு நாள் ஆவது போன்று வாழ்வு, மாய்வு ஆகிய இரண்டு பகுதிகளும் ஜீவனுக்கு உரியவைகளாகின்றன. இரவையும், பகலையும் கணக்கில் எடுத்துக்கொள்வது போன்று, ஜீவிதத்தையும் , மரணத்தையும் கணக்கில் எடுத்துக்கொள்வது அவசியம். மரணத்துக்குத்தன்னை ஆயத்தப்படுத்தாத மனிதன் அரைமனிதன் ஆகிறான். மரணத்தைப்பற்றி நினைக்கவும் பேசவும் அஞ்சுகிறவன் ஒருநாளும் ஆத்ம சாதகன் ஆகான். வாழ்வுக்குத் தன்னை ஆயத்தப்படுத்துவது போன்று மரணத்துக்கும் தன்னை ஆயத்தப்படுத்துபவனே உயிர் வாழ்க்கையின் உட்பொருளை அறிந்தவன் ஆகிறான். எனவே சுடுகாட்டோடு நல்ல தொடர்பு வைத்துப் பழகுதல் சைவன் ஒருவன் செய்யக்கிடக்கும் பெரிய கடமையாகிறது. பிரபஞ்ச முழுதிலும் சிவபெருமான் ஊடுருவி நிறைந்திருக்கிறார். இப்பிரபஞ்ச முழுதையும் சுடுகாடு என்று கருதுவது பொருந்தும். ஏனென்றால் தோன்றியுள்ள உயிர்கள் மறைந்து வருவதையும் இதனுள் ஓயாது காண்கிறோம். இயற்கை

எய்துதற்கு இருப்பிடமாவது சுடுகாடு. இனி அதற்கு மேல் ஆத்மசாதகன் ஒருவன் தன்னுடைய உடலையே சுடுகாடாகக் கருதவேண்டும். அவன் உண்ணும் உணவு வகைகளெல்லாம் உயிர்த்தத்துவத்தினின்று வந்தவைகள். அந்த உணவு வகைகளெல்லாம் ஓயாது உடலில் தகனமாய்க் கொண்டிருக்கின்றன. ஜீரணமாகிற செயலைத் தகனக் கிருத்தியமாகக் கருதுதல் ஒவ்வும். மானுட உடலுக்கு நிகரான சுடுகாடு இயற்கையில் இல்லை என்றே இயம்பலாம். இனி, இந்த மானுட உடலில் தான் இறைவனுடைய சான்னித்தியம் சிறப்பாக வெளியாகிறது. தன் உடலை இறைவன் வீற்றிருக்கும் ஆலயமென்றோ, இறைவன் எழுந்தருளியிருக்கும் என்றோ உறுதிகொள்பவன் சைவன்.

சுடுகாடுகளுள் பெரிய சுடுகாடாகிய காசியில் சாதற்கென்றே தங்களுடைய அந்தியகாலத்தில் பலர் ஆங்குச் செல்கின்றனர். அப்படிச் செல்கிறவர்கள் இறைவனைத் தவிரத் தங்களுக்கு உற்றார் யாருமில்லை என்பதை உறுதிப்படுத்துகின்றனர். வாழ்ந்திருக்கும்பொழுதே நல்லமுறையில் மறைந்துபோவதற்கும் அன்னவர் தங்களை ஆயத்தப்படுத்துகின்றனர். கோயில் சுடுகாடு என்னும் கோட்பாட்டை நல்ல முறையில் அனுஷ்டானத்துக்குக் கொண்டு வருவதால் அவர்கள் நல்ல சைவர்கள் ஆகின்றனர்.

ருத்திரன் என்னும் சொல் அழச்செய்பவன் எனப் பொருள்படுகிறது. சிவன் என்னும் சொல் செம்மை அல்லது மங்களம் எனப் பொருள்படுகிறது. பெரிதும் மங்கள சொரூபமாக இருக்கிற சிவன் சில வேளைகளில் ருத்திராகாரம் ஆவதுண்டு. செல்வம் மிகப்படைத்துள்ள ஒரு கொடையாளியிடம் பொருள் நாடி ஒரு சிலர் சென்றனர். அவர்கள் போன நேரத்தில் அவ் வள்ளல் முன்கோபமே வடிவெடுத்தவராகத் தென்பட்டார். பார்த்த்வர் மீதெல்லாம் சீறி விழுந்தார். மிரட்டுதலையும் வசைமொழிகளையும் வாரிக் கொட்டினார். தீப்பொறி பறப்பது போன்று அவருடைய முகம் தென்பட்டது. கையில் அகப்பட்டதை யெல்லாம் எடுத்துக்கொண்டு பார்க்க வந்தவரைப் புடைக்கப் போகின்றவர் போன்றும் காட்சி கொடுத்தார். அப் பயங்கரத் தோற்றத்தைப் பார்த்தவர்கள் அமைதியாகப் பின்வாங்கி விட்டனர். அம்மனிதர் அருகில் அவ்வேளையில் போவது பொருந்தாது என்று வந்தவர்கள் முடிவு கட்டினர். ஆனால் அம்மனிதனிடம் அல்லும் பகலும் பணிவிடை செய்து வந்த வேலையாள் ஒருவன் இருந்தான். அவனோ தன் தலைவன் கொண்டிருந்த சீற்றத்தைப்பற்றிச் சிறிதும் கவலைப்படவில்லை. அவருடைய பயங்கரத் தோற்றம் அவனுக்குப் புதியதல்ல. எஜமானன் சிற்சில வேளைகளில் அப்படித் தான் ரௌத்திராகாரமாக இருப்பாரென்று அவன் நன்கு அறிந்திருந்தான். எஜமானுடைய பயங்கரமான பேச்சுக்களுக்கிடையில் தான் செய்யக்கிடந்த பணிவிடையைப் பற்றிய உத்தரவை வேலைக்காரன் வாங்கிக்கொண்டான். அவருக்குச் செய்யவேண்டிய கைங்கரியத்தையும் அவன் முறையாகச் செய்து

சாதித்தான். தான் மட்டும் மனத்தில் சிறிதேனும் கிலேசமோ அச்சமோ கொள்ளவில்லை. தலைவன் அமைதியுற்றிருப்பதும், சினந்து கொதித்துக் கொண்டிருப்பதும், அவரோடு பழகிய வேலைக்காரனுக்கு ஒன்றே. வாழ்க்கையில் அத்தகைய பயிற்சியைப் பெற்ற வேலைக்காரன் நல்ல வேலக்காரன்.

சிவபெருமானோடு இணக்கம் வைக்கின்ற சைவன் தனது வாழ்க்கையிலே அத்தகைய பயிற்சியைப் பெற வேண்டும். 'காயில் உலகனைத்தும் கற்பொடிகாண்' என்பது கோட்பாடு சிவபெருமான் அண்டங்களை எல்லாம் நொடிப்பொழுதில் துடைக்க வல்லவர். உயிர்களையெல்லாம் அவர் ஓயாது எடுத்து விழுங்கிக்கொண்டிருக்கிறார். பிரபஞ்சமெங்கு முள்ள உயிர்களனைத்தையும் சிற்சில வேளைகளிலே தத்தளிக்கும்படி அவர் செய்து வைத்து விடுகிறார். ஒவ்வொரு தனி மனிதனுக்கு வாழ்க்கையிலே துன்பத்துக்கு மேல் துன்பத்தை அவர் வாரிப்பொழிகிறார். துன்பத்துக்கு அஞ்சி நாலாபக்கமும் பறந்தோடுகின்றவர்கள் இருக்கிறார்கள். துன்பத்தை அமைதியோடு ஏற்றுக்கொள்கிறவர்கள் இருக்கிறார்கள். 'இன்பமே எந்நாளும் துன்பமில்லை' என்னும் பெருநிலையில் ஊறியிருப்பவனே நல்ல சைவன். அவன் வாழ்வதையும் மாய்வதையும் சமனாகக் கருதுகிறான். காலதத்துவத்தை அறிகிறவன் இரவுக்கும் பகலுக்கும் இடையில் வேற்றுமை காண்பதில்லை. ஜீவதத்துவத்தை அறிகிறவன் பிறப்புக்கும் இறப்புக்கும் இடையில் வேற்றுமை காண்பதில்லை. உண்மையை அறியாதவர்கள் பிறந்து வாழ்ந்திருப்பதைப் பிரியத்தோடு வரவேற்கின்றனர். மாய்ந்து மறைந்து போவதைப் பயந்து வெறுக்கின்றனர். வாழ்வு வேண்டுமென்று, மரணம் வேண்டாமென்றும் பாகுபடுத்துபவன் சைவன் ஆகான். ஜனன மரணத்தைக் குறித்து வேண்டுதல் வேண்டாமை இலாத மன நிலையைப் பெற்றிருப்பவனே சிவனாருடைய சொரூபத்தை எடுத்திருப்பவன் ஆகிறான். சாரூப்பியம் என்னும் அடைமொழி அவனுக்குப் பொருத்தமானதாகிறது. அவனே நல்ல சைவன். சிவபெருமான் முழுமுதற்பொருளாதலால் அவர் தாயுமிலி, தந்தையுமிலி; யாருக்கும் அவர் பிள்ளையாகப் பிறக்கவில்லை. ஒப்பு உயர்வு அற்றவராதலால் அவர் தனிப் பொருள். யாண்டும் தன்னந்தனியராக அவர் இருக்கிறார். சைவன் ஒருவன் தானே சிவசொரூபம் ஆகவேண்டும். அதன் பொருட்டு அவன் துணிந்து செய்யக் கிடக்கும் கடமையொன்று உண்டு. இம்மண்ணுலகுக்குள்ளே தனக்குத் துணையாக யாரையும் அவன் அழைத்து வரவில்லை. தனியாக வந்துள்ளான். இவ்வையாக வாழ்வை முடித் விட்டு வெளியேகுங்கால் உற்றார் யாரும் அவனுக்குத் துணையாக வரமாட்டார்கள். ஆதலால் இவ்வையகத்தில் வாழ்ந்திருக்கும் பொழுதும் அவன் தன்னந்தனியன் ஆகிவிட வேண்டும். முன்பு எத்தனை எத்தனையோ பிறவிகளில் அவனுக்குத் தாய் தந்தையராய் அமைந்தவர்கள் அவனை விட்டுப் பிரிந்து போய்விட்டார்கள். இப்பொழுது கண்கூடாகத் தென்படும் தாய் தந்தையர் சாசுவதமாக அவனுக்குச் சொந்தமாக இருக்கமாட்டார்கள். ஆதலால் இப்பொழுது

கண்கூடாக இருக்கும்பொழுதேதான் அவர்கலுக்குரியவனல்லன், அவர்கள் தனக்குரியவர்களல்லர் என்னும் துணிவு சைவன் ஒருவனுக்கு வந்துவிட வேண்டு . இவ்வுலகில் தனக்கு உற்றார் யாரும் இல்லையே என்று வருந்துபவன் கோழை. சிவனைச் சார்தற்கு அவன் தகுதியற்றவன். சிவனைத் தவிர தனக்குச் சார்கதி இம்மண்ணுலகில் யாருமில்லை என்று தனித்திருந்து பழகுபவனே நல்ல சைவன்.

சைவன் ஒருவன் உயிர்களனைத்திடத்தும் அன்பாயிருந்து பழகவேண்டும். ஆனால் அத்தகைய பயிற்சி அவனுக்கு அரைகுறையானது. உயிர்வகைகளுள் கொடிய்வைகள் உண்டு. கொடிய உயிர்களையும் உலகிலுள்ள கொடுமைகளையும் வீரசைவனாயிருந்து ஒருவன் எதிர்த்துப் போராட வேண்டும். தீமையைக் கண்டு மிரண்டோடுபவன் பூலோகத்தில் ஆனாலும் சரி, சிவலோகத்தில் ஆனாலும் சரி வாழ்க்கைக்குத் தகுதியுடையவனாகான். இறைவன் அமைத்து வைத்துள்ள இயற்கையிலே நலம் மேடு ஆகிய இரண்டும் மலிந்து கிடக்கின்றன. கேடுகளைக் கடவுள் ஏன் படைத்தார் என்று பலர் கேட்கின்றனர். அவர் வேண்டுமென்றே அவைகளைப் படைத்து வைத்துள்ளார். கேடுகளை எதிர்த்துப் போராடுவதன் மூலமே மனிதன் திறம் பெறுகிறான். அவைகளை எப்படி எதிர்த்து ஒழிக்க வேண்டுமென்பதை இறைவன் தாமே காட்டியருள்கிறார். கொல்புலித்தோல் அவருக்கு நல்லாடையாக அமைந்திருக்கிறது. தானாகச் செத்த புலியின் தோல் அல்ல அவர் அணிந்திருப்பது. வலிவு வாய்ந்த புலியைத் தாமே எதிர்த்துக் கொன்று அதன் தோலை ஆடையாக இடுப்பில் இசைத்திருக்கிறார். அப் பெரியபாடத்தைச் சைவன் ஒருவன் கற்றுக்கொள்ள வேண்டும். சக்தியற்றுச் செயலற்று அப்பாவியாகக் கிடப்பவன் சைவன் ஆகான். பராக்கிரமத்துடன் வினையாற்றி, தீதைத் துணிந்து அகற்றுபவனே சைவன். அப்படி அவன் சைவன் ஆவதற்கு ஆன கணக்கற்ற சந்தர்ப்பங்களை இயற்கையிலே இறைவன் அமைத்து வைத்திருக்கிறார். தாம் ஆற்றும் அரும்பெரும் திருவிளையாடல்கள் மூலமாகவும் மனிதன் உலகிலே எச்செயல்களை எப்படி ஆற்ற வேண்டும் என்பதைக் காட்டியுள்ளார். சாரூப்பியம் அல்லது சிவனாருடைய வடிவத்தை எடுத்தல் என்பதனுடைய பொருள் அவர் போன்று பேராற்றல் படைத்தவன் அவதாம். அரும்பெரும் செயலின் மூலம் சிவன் போன்று ஆகிறவன் சைவன்.

## நாலாவது படி

சிவசொரூபமும், சிவன் செயல்களும் யாண்டும் நித்தியமானவைகள். உருவங்களை யெல்லாம் கடந்துள்ள அவர் உருவத்துடனும் இருக்கிறார். உயிர் வகைகளைத் தமது வடிவமாகத் திருத்தியமைத்துப் பண்படுத்துவதற்கே அவர் உருவம் பூண்டிருக்கிறார். பண்டொரு காலத்தில் அவர் செய்த திருவிளையாடல்கள்

என்பன இன்றும் இயற்கையினுள் ஓயாது நிகழ்ந்து வருகின்றன. அவருடைய செயல்களைப் பின்பற்றி உயிர்வகைகள் உய்வு அடைதற் பொருட்டே அவருடைய கிருத்தியங்கள் நிகழ்ந்து வருகின்றன. சொரூபத்திலும் செயலிலும் சிவன் போன்று ஆக முயலுகின்றவர்களே சைவர் ஆகின்றனர். அதில் நாலாம் படி மிகக் கடினமனது. அவருடைய அரும்பெரும் செயல் எத்தகையது என்பதை ஆராய்வோம்.

**கோலால மாகிக் குரைகடல்வாய் அன்றெழுந்த**
**ஆலால முண்டா னவன்சதுர்தான் என்னேடீ?**
**ஆலால முண்டிலனேல் அன்றயன்மா லுள்ளிட்ட**
**மேலாய தேவரெல்லாம் வீடுவர்காண் சாழலோ.**

இங்ஙனம் மாணிக்கவாசகர் திருவாய் மலந்தருளியுள்ளார். தேவர்களும் அசுரர்களும் பாற்கடலைக் கடைந்தபொழுது கிளம்பிய விஷத்தை உண்டு இறைவன் அவர்களனைவரையும் உய்வித்தார் என்பது இதன் கருத்து. இச்செயல் பண்டு ஒருகால் நிகழ்ந்தது என்று பொருள்படுத்துவது போதாது. இது இன்றைக்கும் ஓயாது நிகழ்ந்து வருகிறது. வாழ்வு பாற்கடலெனக் கருதப்படுகிறது. நல்லவர்கள், கெட்டவர்கள் ஆகிய எல்லாரும் வாழ்வைக் கடைந்தெடுக்கின்றனர். நல்லவர்கள் தேவர்கள் என்றும் கெட்டவர்கள் அசுரர்கள் என்றும் யாண்டும் இயம்பப்படுகின்றனர். வாழ்வை வெவ்வேறு விதங்களில் பயன்படுத்துவது அவர்களின் குறிக்கோள் ஆகும். அப்படிச் செய்வதால் அவர்களுக்குக் கல்வி கிட்டும்; செல்வம் சேரும்; ஆடையாபரணங்கள் அமையப் பெறும்; வண்டி வாகனங்கள் கிடைக்கும்; பொருள் சேமிப்பு வேண்டியவாறு அதிகரிக்கும். இவை யாவும் புராண பூர்வமாகப் பகருமிடத்துப் பாற்கடலினின்று சரஸ்வதி, லக்ஷ்மி, கௌஸ்துபம், ஐராவதம், உச்சைச்சிரவம், காமதேனு, கற்பகவிருக்ஷம் முதலியன தோன்றலாயின் எனப் பொருள்படும். வாழ்க்கைக்கு இன்பம் தருகிற இத்தகைய வாய்ப்புக்களையெல்லாம் பெற்று அனுபவித்தான பிறகு இறுதியில் மரணம் என்னும் விஷம் வருகிறது. அதினின்று மீள எவ்வுயிர்க்கும் இயலுவதில்லை. இறைவனிடம் யார் சரணடைகின்றனரோ அவர்களை மரணத்தினின்று உய்வித்தல் பொருட்டு அம்மரணம் என்னும் விஷத்தைத் தாம் உண்டு தமது கண்டத்தில் அவர் நிறுத்துகிறார். ஆதலால் அவருக்கு நஞ்சுண்டான் என்றும், நீலகண்டன் என்றும் பெயர்கள் வந்துள்ளன. சிவபெருமானுடைய தியாகம் ஈண்டு உச்சநிலையை எட்டுகிறது. பாற்கடலில் வந்த பொருள்களில் அவர் பங்கு கொள்ளப் போகவில்லை. ஆனால் அதில் விளைந்த விஷத்தை மற்றவர்கள் ஏற்க முடியாது பரிதவித்தபொழுது உயிர்களின் நலத்தை முன்னிட்டு அவர் தாமே அதை ஏற்றருளினார். தியாகம் அல்லது துறவுக்கு இதுவே சிறந்த விளக்கமாகிறது. தியாகராஜன் என்றும் துறவி வேந்தன் என்றும் எம்பெருமான் அழைக்கப் பெறுகிறார். துன்பத்தினின்று விலகிக்கொள்ளுதல் துறவு அல்ல. உலகம் தருகிற

இன்பங்களில் தனக்குப் பங்கு கேளாது விலகியிருப்பது துறவு. அது மட்டும் போதாது. இன்பம் துன்பம் ஆகிய இரண்டையும் நிகராகப் பாராட்டுதற்கு மேல் மற்றொரு நிலையுண்டு. பிற உயிர்களின் நலத்துக்காகவென்றே தனது உடல் வாழ்வை ஒப்படைத்து வைத்திருக்க வேண்டும். மற்ற உயிர்கள் இன்புற்றிருத்தல் பொருட்டுத் தான் துன்பத்துக்குமேல் துன்பத்தை அமைதியாக ஏற்றுக்கொள்ளுதல் துறவு. ஒவ்வொரு நொடிப்பொழுதிலும் இச்செயலைச் சிவன் செய்து வருகிறார். அது எப்படியென்று ஆராய்ந்து பார்ப்போம். ஐம்பூதங்கள் வடிவத்தில் அவர் இலங்குகிறார். அவருடைய தோற்றங்களுள் இவையாவும் மிக ஸ்தூலமானவைகளாம். வாழ்ந்திருக்கும் உயிர்கள் மண்ணின்மீது மலம் என்னும் விஷத்தைப் போட்டுக்கொண்டிருக்கின்றன. அதுதான் வாழ்வின் விளைவு. இறைவன் மண்மயமாயிருந்து மலத்தைத் தூயதாக்குகிறார். மண்ணினுள் புதைக்கப்படும் அழுக்கு சில தினங்களுள் மண் மயமாக மாறித் தூயதாய் விடுகிறது. உயிர்வகைகள் நீரைச் சிறுநீராக்கிப் பாழ்படுத்துகின்றன. அவர் திரும்பவும் அதை நன்னீராக மாற்றியமைக்கிறார். கெட்ட நீரெல்லாம் ஆவியாக மாறி வானத்திற்குச் சென்று பிறகு தூய மழை நீராகப் பூமிக்கு வருகிறது. அவர் தீவண்ணனாயிருந்து மலினப்பட்டவைகலை யெல்லாம் எரித்துத் தூய்மைப்படுத்துகிறார். உயிர்கள் விடும் நச்சுக் காற்றை அவர் நல்ல காற்றாக மாற்றியமைக்கிறார். அப்படி அவர் செய்யாவிட்டால் உயிர்களனைத்தும் அழிந்துபோம்.

துறவு வாழ்க்கையில் சிவன் போன்று ஆகின்றவன் நல்ல சைவன். எண்ணிறந்த உயிர்வகைகளுக்கு அவர் அம்மையப்பனாக இருந்து அத்தனை உயிர்களையும் ஓம்பி வருகிறார். அப்படி உயிர்களை வளர்ப்பதில் வரும் துன்பங்களை யெல்லாம் அவர் தாய் தந்தையர் வடிவங்களில் இருந்து பொறுமையுடன் சகித்துக்கொள்கிறார். பின்பு உலகனைத்தையும் உண்டுபண்ணிய இறைவன் அதில் உரிமை கொள்ளாது இருக்கிறார். துறவறத்துக்கு ஒப்ப அவர் பிசைஷ ஏற்று உண்கிறார். தமக்கு என்று அவர் எதையும் வைத்துக்கொள்வதில்லை என்பது அதினின்று வெளியாகிறது. ஒன்றுக்கும் உதவாத மண்டையோடு அவருடைய பிக்ஷா பாத்திரம். யாரும் விரும்பாத பாம்பு அவரது ஆபரணம். அக்கொடிய ஜந்துவை அவர் அணிந்து கொண்டிருப்பதில் மற்றொரு கருத்து அடங்கியிருக்கிறது. சிவனுக்குப் புறம்பாக அதைக் கருதுமிடத்தே அது கொடிய பிராணியாகிறது. இறைவனோடு இணைத்து வைத்துப் பார்க்கின்றவர்களுக்கு அது சங்கராபரணம் ஆகிறது. அதனிடத்துக் கொடுமை ஒன்றுமில்லை. நச்சுப்பாம்பையும் நல்லதாகக் கருதுபவனே சைவன் ஆகிறான். கெட்ட உயிர்களையும் தமக்குச் சொந்தமாகச் சிவன் காப்பாற்றி வருகிறார். அவர் செய்வது போன்று சைவன் ஒருவன் உலகுக்கு ஓயாது நலம் செய்துகொண்டிருக்க வேண்டும். ஆனால் உலகில் எதிலும் அவன் உரிமை பாராட்டலாகாது. பிறர் நலத்துக்கென்றே உயிர் வாழ்ந்திருப்பவன் நல்ல சைவன். சுயநலத்தைக் கனவிலும் கருதாது இருப்பவனே

நல்ல சைவன். சிவனைப் பின்பற்றி உயிர்களெல்லாம் சைவர்கள் ஆகவேண்டும் என்று அவர் நஞ்சுண்பவராயிருந்து காட்டியருள்கிறார். அவர் காட்டியருளும் துறவு என்னும் பெரு நெறியைப் பின்பற்றுபவனே சைவன்.

இறைவனையடையும் படிகளுள் சாயுஜ்யம் என்பது நாலாம்படி ஆகிறது. அதற்கு ஆத்ம சாதகன் பக்குவம் மிக அடைந்திருக்கவேண்டும். மனிதன் அடைந்துவரும் பக்குவங்களுள் சிவபெருமான் செய்வதுபோன்று தானும் செய்து வருவதே சிறந்த பக்குவமாகும். உலகம் தருகிற இன்பங்களில் அவர் பங்குகொள்வதில்லை. உலகில் தருகிற இன்பங்களில் அவர் பங்குகொள்வதில்லை. உலகில் எதனிடத்தும் அவர் உரிமை பாராட்டுவதில்லை. பின்பு மன்னுயிர்களின் நலத்தின் பொருட்டு அவர் விஷத்தை உண்பதுபோன்று சைவன் ஒருவன் அன்புடன் ஆருயிர் சேவை செய்தல் என்னும் விஷத்தை உண்ணவேண்டும். சேவை செய்யத் தெரிந்துகொள்ளாதவனுக்கு அது விஷம், சிவத்தொண்டாகக் கருதிச் செய்கின்றவனுக்கு அது அமிர்தம். இத்தகைய பெருவாழ்வே துறவறம் எனப்படுகிறது. அதில் தேர்ச்சியடைகின்றவன் சிவசாயுஜ்யம் அடைகிறான்.

சிவசாயுஜ்யத்தின் உட்கருத்தை நாம் அறிந்துகொள்ள வேண்டும். இயற்கையில் நீரை அதற்கு உபமானமாக எடுத்துக்கொள்ளலாம். பரந்த நிலவுலகினும் அதிகமாகப் பரந்திருப்பது கடல். அக்கடலினின்று நீர் ஆவியாக மாறி மேலே போகிறது. ஆங்கு அது வெண்மேகம். கார்மேகம் என்னும் வடிவங்களை எடுக்கிறது. ஓரிடத்தில் மழையாகப் பெய்கிறது. ஹிமாசலம் போன்ற வேறோர் இடத்தில் அது உறைபனிக் கட்டியாக விழுகிறது. விரைவில் அல்லது நெடுநாளைக்குப் பிறகு அது திரும்பவும் கடலுக்கு வந்து சேர்கிறது. புறப்பட்டு இடத்துக்குத் திரும்பு வந்து சேர்வது இயற்கையிலுள்ள அனைத்தினுடைய செயல். கடலினின்று புறப்பட்டு நீர் வெளியில் வெவ்வேறு பெயரெடுத்திருந்தது. திரும்பவும் கடலுக்குள் வந்த பிறகு அப்பெயர்களையும் வடிவங்களையும் இழந்துவிட்டு பழைபடி அது கடல்நீர் ஆகிவிடுகிறது. அந்நிலை அது பெறுகிற சாயுஜ்யம்.

உயிர் வகைகளெல்லாம் இறைவனிடத்திருந்து கிளம்பியவைகள். அவைகள் ஜீவர்களாக இருக்கின்றபொழுது எண்ணிறந்த பிறவிகளை எடுத்து வாழ்க்கைக்குரிய பாடங்களைக் கற்கின்றன. கல்லாய்ப் பிறந்து, புல்லாய்ப் பிறந்து, புள்ளினமாய்ப் பிறந்து, விலங்காய்ப் பிறந்து, மக்களாய்ப் பிறந்து, அசுரராய்ப் பிறந்து, தேவராய்ப் பிறந்து, முனிவராய்ப் பிறந்து ஜீவாத்மாக்கள் படிப்படியாய்ப் பக்குவமடைந்து வருகின்றன. அத்தனைப் பிறவிகளையெல்லாம் தொகுத்து ஒரு பெரிய பயணமாகக் கருதலாம். அறிந்தோ அறியாமலோ உயிர்வகைகளெல்லாம் தங்களுடைய வாழ்க்கையின் மூலம் புறப்பட்டு இடமாகிய இறைவனை நோக்கிப் பயணம் போய்க்கொண்டிருக்கின்றன. அப்பயணத்தின் குறியை உணர்கின்ற ஜீவர்கள் விரைந்து செல்ல முயல்கின்றனர். அப்படி இறைவனுக்குப் பக்கத்தில் வந்திருப்பதை

உணருங்கால் சாலோகம், சாமீப்யம், சாரூப்யம் என்னும் பதவிகளில் ஜீவர்கள் இருக்கிறார்கள்.

'எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தேன், மெய்யே உன் பொன்னடிகள் கண்டின்று வீடுற்றேன்' என்னும் நிலையை எட்டுங்கால் அது சாயுஜ்யம் ஆகிறது. 'வீடு பெற நில்' என்பதன் கோட்பாடு இதுவே. இப்பெரு நிலையை வீடு என்றும், முக்தி என்றும், மோக்ஷ சாம்ராஜ்யம் என்றும், அகண்ட சச்சிதானந்தம் என்றும், சிவனிடத்து இரண்டறக் கலத்தல் என்றும் வெவ்வேறு பெயரிட்டுச் சான்றோர் அழைக்கின்றனர்.

முப்பொருளைப்பற்றிய பேச்சு சமயவாதிகலுக்கிடையில் உண்டு. முப்பொருளை பசு, பதி, பாசம், என்றும், ஜீவாத்மா, பரமாத்மா, ஜகத் என்றும் வெவ்வேறு பெயரிட்டு அழைக்கின்றனர். பரத்தை நோக்கிப் பயணம் போய்க் கொண்டிருக்கிறபொழுது இம் மூன்றையும் பிரித்து வைத்துப் பேசுதற்கு இடமுண்டு. வீடுபேறு அடைந்தான பிறகு முப்பொருள்களாக இருப்பவைகள் ஒரே மூலப்பொருளாய் விடுகின்றன. கடலுக்குள் விழுந்த பிறகு ஆற்று நீர் தனது வியக்தியை இழந்துவிடுகிறது. மழைநீர் தனது வியக்தியை இழந்துவிடுகிறது. கடலில் இருக்கும் ஆற்றுநீர் என்றோ, மழைநீர் என்றோ பின்பு அதைப் பகர்வதில்லை. ஜீவன் ஒருவன் தனது பெரும் பயணத்தில் ஓரிடத்தில் கல்லாய் இருந்தான். மற்றோரிடத்தில் புல் ஆனான்; பின்பு பறவை ஆனான்; விலங்கு ஆனான்; மகன் ஆனான்; இந்த வியக்தியையெல்லாம் விட்ட பிறகே அவனுக்குச் சிவ சாயுஜ்யம் வருகிறது. எண்ணத்தால் வெவ்வேறு ஜீவர்களாக அவன் இருந்தான். பெரும் பயணம் போய்க்கொண்டிருந்ததாகவும் அவன் தன்னைக் கருதிக்கொண்டான். எண்ணத்தைத் தாண்டிய பிறகு சித்தமலம் அறுபட்டு அவன் சிவமாகி விடுகிறான். பின்பு புதிதாகப் பக்குவம் அடைந்த சிவம் ஒன்று, யாண்டும் தனது பெருநிலையிலேயே நிலைத்திருந்த மூலப்பொருளாகிய சிவம் மற்றொன்று என்று இரண்டு சிவம் இல்லை. யாண்டும் இருப்பது ஒரே தனிப்பொருள், ஜீவபோதத்தை இழந்ததற்கு அறிகுறியாக 'ஊண் கெட்டு, உயிர்கெட்டு, உணர்வு கெட்டு, என் உள்ளமும் போய் நான் கெட்டவா பாடித் தென்னேணம் கொட்டாமோ' என்னும் ஆப்தவாக்கியம் பிறந்து உள்ளது. அப்படி ஜீவபோதத்தை இழப்பதால் அவன் சூன்யமாகிவிடுகிறானா என்னும் கேள்வி பிறக்கிறது. 'அந்தம் ஒன்றில்லா ஆனந்தம் நான் பெற்றேன்' என்னும் ஆப்தவாக்கியம் அதைத் தொடர்ந்து வருகிறது. அந்தமில்லாத ஆனந்தமே அகண்ட சச்சிதானந்தம் எனப்படுகிறது. அது பூரணப் பொருள்; சூன்யமல்ல. ஆங்கு இரண்டுக்கு இடமில்லை. அப்பெருநிலையை அடைதற்கு முறையாக முழுமனத்துடன் முயல்பவன் சைவன்.